அப்பீலுக்குப் போக வசதி கொடுக்கும்போது, அந்தந்த ஜில்லா ஜட்ஜுகளையே போடப்போகிறார்களா என்பதையும் திட்டவட்டமாகச் சொல்லவேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடிக்கிறேன்.

* **THE HON. SRI M. BHAKTAVATSALAM** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, டைம் பார் என்பது தீர்ப்புக்கு அல்ல; அப்பீலைப் பைல் பண்ணிவிட்டால் போதும், தீர்ப்பு எப்பொழுது வேண்டுமானாலும் கொடுக்கலாம். அது குறிப்பிட்ட காலத்தில் தான் கொடுக்கவேண்டுமென்பதில்லை. கிரிமினல் கேஸ் சம்பந்தமாக, வேறு ராச்சியத்தில், வருஷக் கணக்காக ஆகிறது என்று சொன்னார்கள். எப்படியும் தாமதம் இல்லாமல் செய்யவேண்டிய ஏற்பாடுகள் செய்யப்படும் என்று சொல்லிக்கொண்டு முடிக்கிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras Hindu Religious and Charitable Endowments (Second Amendment) Bill, 1961 (L.C. Bill No. 4 of 1961) as passed by the Legislative Council be passed."

The motion was put and carried and the Bill was passed.

## VI.—ANNOUNCEMENT.

(1) THE MADRAS PUBLIC TRUSTS (REGULATION OF ADMINISTRATION OF AGRICULTURAL LANDS) BILL, 1961 (L.A. BILL NO. 47 OF 1961).

DEPUTY SPEAKER : I have to announce to the House that the Governor has given his recommendation for the considaration by the Legislative Assembly of the Madras Public Trusts (Regulation of Administration of Agricultural Lands) Bill, 1961 (L.A. Bill No. 47 of 1961).

## V.—GOVERNMENT BILLS—*cont.*

(2) THE MADRAS PUBLIC TRUSTS (REGULATION OF ADMINISTRATION OF AGRICULTURAL LANDS) BILL, 1961 (L.A. BILL NO. 47 OF 1961).

* THE HON. SRI M. BHKATAVATSALAM : Sir, I move—

"That the Madras Public Trusts (Regulation of Administration of Agricultural Lands) Bill, 1961 (L.A. Bill No. 47 of 1961) be referred to a Select Committee consisting of

1 The Hon. Sri M. BHAKTAVATSALAM.
2 The Hon. Sri C. SUBRAMANIAM.
3 Sri P. G. KARUTHIRUMAN.
4 Sri R. SRINIVASA IYER.
5 Sri T. T. DANIEL.
6 Sri K. S. G. HAJA SHERIFF.
7 Sri R. SUBRAMANIAM.
8 Sri K. R. VISWANATHAN.

9th November 1961] [Sri M. Bhaktavatsalam]

9 Sri K. S. Subramania Gounder.
10 Srimathi Dr. T. S. Soundaram Ramachandran.
11 Sri A. R. Subbiah Mudaliar.
12 Sri V. K. Ramaswamy Mudaliyar.
13 Sri D. S. Authimoolam.
14 Sri V. K. Kothandaraman.
15 Sri M. Selvaraj.
16 Sri A. R. Marimuthu.
17 Sri G. Narayanaswami Naidu.

ஸார், இந்த உச்ச வரம்பு மசோதா இந்த மன்றத்தில் விவாதிக்கும் போதே, கனம் அங்கத்தினர்களுக்கு நினைவு இருக்கும், தர்ம ஸ்தாபனங்களில் உள்ள நிலங்கள் சிறுக சாகுபடி செய்யப்பட வேண்டியது குறித்து தனியாக ஒரு மசோதா தயாரித்துக் கொண்டு இருக்கிறோம், இது சீக்கிரத்திலேயே இந்த மன்றத்தில் சமர்ப்பிக்கப்படும், அதைச் சட்டமாக்க முற்படுவோம் என்று கூறியிருந்தேன். இன்றைக்கு உச்ச வரம்பு மசோதா சட்டமாக்கப்பட்டுவிட்டது. அந்த மசோதா சமர்ப்பித்த காலத்திலேயே, தர்மஸ்தாபனங்களின் நிலங்கள் 200 ஏக்கரா என்று அந்த மசோதாவில் போட்டிருந்தோம். அந்த மசோதாவைப் பரிசீலிக்கும்போது, பொறுக்குக் கமிட்டி, அந்த மசோதாவிலேயே தர்ம ஸ்தாபன நிலங்கள் பற்றிச் சொல்வது சட்டபூர்வமாக ஆகாது, அரசியல் அமைப்புச் சட்டத்திற்கு விரோதமாக ஆட்சேபனைகளுக்கு இடமளிக்கும் என்று கருதியது. ஆகவே எக்ஸெம்ஷன் கொடுக்கப்பட்டது. ஆனால், பொறுக்குக் கமிட்டி வேறொரு மாற்று யோசனையையும் அளித்தது. இதற்கென்று ஒரு தனி மசோதாவைக் கொண்டுவருவது நலமாக இருக்கும் என்றும் கருதியது.

இதிலே முக்கியமானது என்னவென்றால், தர்மஸ்தாபன நிலங்கள் நல்ல முறையிலே நல்ல வகையிலே பயிரிடப்பட வேண்டும், விவசாயிகள் சுரண்டப்படக் கூடாது, உற்பத்தி பெருக வேண்டும், ஸ்தாபனங்களுக்கு வருமானம் அதிகப்பட வேண்டும், குறையக்கூடாது. இவைகள்தான் லட்சியம். அந்த லட்சியத்தில், எல்லா தர்மஸ்தாபனங்களுக்கும், எல்லா மதத்தையும் சேர்ந்த மதம் இல்லாத கல்வி போன்ற ஸ்தாபனங்களானாலும் சரி, அவைகளுக்கும் உச்சவரம்பு மசோதாவில் விதிவிலக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்தமாதிரி விதிவிலக்குக்குள்வான நிலங்கள் சம்மந்தப்பட்டது இந்த மசோதா.

இதிலே நிர்வாகிகள் நேரிடையாகப் பயிரிடக் கூடாது. ஏன் அப்படிச் சொல்கிறோம் என்றால், முக்கியமாக குடியானவர்கள், குத்தகைக்காரர்கள், இப்பொழுதே பயிரிடுபவர்கள், அப்புறப்படுத்தக் கூடாது என்பது நோக்கம். நிலம் இல்லாதவர்களுக்கு நிலம் கிடைக்க வேண்டும். இன்னொன்றும் அனுபவத்தில்

கண்டோம். மடங்களோ, ஆலயங்களோ—விதிவிலக்காகச் சில இருக்கலாம்—சொந்தப் பண்ணை வைத்துச் சாகுபடி செய்வதில் அதிக நஷ்டந்தான் ஏற்படுகிறது. அவர்கள் நிலத்தைச் சும்மாவாகவே போட்டிருந்தால்கூட லாபமாக இருக்கும்போல் இருக்கிறது. அப்படிச் செய்வதால் தேவஸ்தானத்திற்கு எந்த வரும்படியும் வருவதில்லை என்பதைக் கண்டிருக்கிறோம், அவர்கள் கணக்குகளைப் பார்க்கும் போது. ஆகையினால், சொந்தமாக சாகுபடி செய்வது கூடாது என்கிறோம். ஆனால், உசிதமான கேசுகளில் விதிவிலக்கு அளிக்கப்படும். அப்படி அளிக்கப்பட வேண்டும். சில இடங்களில் நந்தவனம் இருக்கிறது. சில இடங்களில் தோட்டங்கள் இருக்கின்றன, சில இடங்களில் தர்ம ஸ்தாபனங்களுக்குச் சொந்தமான நிலங்கள் இருக்கின்றன. அவற்றில் சாகுபடி செய்ய வேண்டியதாக இருக்கும். சில இடங்களில் மாணவர்களுக்கு உதவி அளிக்கும் வகையில் நிலம் இருக்கலாம் அவைகளில் சாகுபடி செய்ய வேண்டியதாக இருக்கும். அவைகளில் சொந்த சாகுபடி செய்யக்கூடாது என்று சொல்வதற்கு இல்லை. அவைகள் எல்லாம் சொந்த சாகுபடி என்ற வகையில் சில நிலம் அமைக்கப்பட்டிருக்கிறது. அதற்கு மேல் உள்ள நிலத்தை குத்தகைக்கு விட்டுவிட வேண்டும். ஒருவர் ஐந்து ஏக்கருக்கு மேல் குத்தகைக்கு வைத்துக்கொள்ளக்கூடாது. எவ்வளவோ தர்ம ஸ்தாபனங்களுக்கு 100 அல்லது 200 ஏக்கர் நிலத்திற்கு மேல் இருக்கிறது. அவைகளை குத்தகை சாகுபடிக்குக் கீழ் கொண்டு வரவேண்டும். அவைகளை நேரடியாக குத்தகைக்கு ஒருவருக்கு என்று விடக் கூடாது. ஆகவே இப்படி ஐந்து ஏக்கருக்கு மேல் ஒருவருக்கு குத்தகைக்கு விடக்கூடாது என்பது மற்றொரு பிரிவு.

சில இடங்களில் குத்தகைதார் சாகுபடி செய்து வருகிறார்கள். அவர்களை ஏற்கெனவேயுள்ள சட்டப்படி அதாவது கல்டிவேடிங் டெனென்ட்ஸ் ஆக்ட் படி அவர்களை அப்புறப்படுத்தவே கூடாது. அப்படிப்பட்ட ஒரு சட்டம் இப்பொழுது நடைமுறையில் இருந்து வருகிறது. அந்தச் சட்டம் அவ்வப்போது நீடிக்கப்பட்டு வருகிறது. அதை இந்தச் சட்டத்தின் மூலமாக நிரந்தரமாக ஆக்கப்படுகிறது. நியாயமான குத்தகை வாங்க வேண்டுமென்ற சட்டம் வருகிறது. அது தற்காலிகமான சட்டமாக இருந்தது. அவையெல்லாம் நிரந்தரம் ஆக்கப்படுகிறது இந்த மசோதாவின் மூலமாக. அவைகளை நிரந்தரமாக ஆக்கும் அளவில் இந்த மசோதாவில் ஒரு பாகமாக அமைக்கப்பட்டிருக்கிறது. குத்தகைதாரர்களிடமிருந்து அதிகப்படியாக வாரம் வாங்குவதோ அல்லது அவர்களை அனுவசியமாக அப்புறப்படுத்தவோ கூடாது என்ற முறையில் இதில் விதி அமைக்கப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட வேறொரு பிரிவுகூட இதில் அமைக்கப்பட்டிருக்கிறது.

அத்துடன் குத்தகைதார்கள் பத்து பேர்களுக்கு மேல் இருந்தால் அவர்கள் கூட்டுறவு முறையில்தான் சாகுபடி செய்ய வேண்டும் என்றும் அமைக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் கூட்டுறவு

9th November 1961] [Sri M. Bhaktavatsalam]

சங்கங்களை அமைத்துக்கொண்டு அந்த முறையில் சாகுபடி செய்ய வேண்டும். அதற்கு வேண்டிய வசதி இந்த மசோதாவில் செய்யப்பட்டிருக்கிறது. இப்பொழுது அனுபவத்தில் பார்க்கும் போது தேவஸ்தான நிலங்களையெல்லாம் கூட்டுறவு முறையில் சாகுபடி செய்து வருவதைப் பார்த்தால் அதனால் நல்ல பலன் கிடைக்கிறது என்று தெரிய வருகிறது. அதனால் பலர் திருப்தி அடைகிறார்கள். பலருக்கு திருப்தி கொடுத்திருக்கிறது. எல்லோரும் அதையேதான் வரவேற்கிறார்கள். தேவஸ்தானங்களின் நிலங்களை வைத்துக்கொண்டு சாகுபடி செய்தவர்கள்கூட முதலில் இதை ஆட்சேபித்தவர்கள் இப்பொழுது இந்த கூட்டுறவு முறை சாகுபடியை வரவேற்கிறார்கள். எல்லோருக்கும் அந்த முறை பலன் அளிக்கிறது. கூட்டுறவு முறையில் சாகுபடி செய்தால் எல்லோருக்கும் லாபம் ஏற்படுகிறது. பயிரிடுகிறவனுக்கும் நல்ல லாபம் கிடைக்கிறது. உற்பத்தி செய்கிறவனுக்கும் லாபம் கிடைக்கிறது. தர்ம ஸ்தாபனத்திற்கும் லாபம் கிடைக்கிறது, விவசாயிகளுக்கும் லாபம் கிடைக்கிறது. ஆகவே இந்த மசோதாவில்கூட கூட்டுறவு முறையில் விவசாயத்தை நடத்துவதற்கும் வழிவகை செய்யப்பட்டிருக்கிறது. இவைகள் இந்த மசோதாவிலுள்ள முக்கியமான அம்சங்கள்.

இன்னும் ஒன்று இந்த மசோதாவில் இருக்கிறது. இதில் ஒரு நிர்ப்பந்தம் வேறு இருக்கிறது. இருபது அல்லது முப்பது எக்கர் இருந்தால் அதை கூட்டுறவு முறையில் சாகுபடி செய்ய விட்டுவிட வேண்டும். அப்படி எடுத்துக்கொள்வதற்கு ஆள்கள் யாரும் இல்லை என்றால் அது சம்பந்தமான அதிகாரி லாண்ட் கமிஷனர் அதைப் பார்த்து அதை யாருக்கு கொடுக்கலாம் என்று இருக்கிறது. அப்படி சாகுபடி செய்வதற்கு ஏற்பாடு அவர் செய்யலாம் என்று இருக்கிறது. தர்ம ஸ்தாபன சொத்தாக இருந்தாலும் சரி அதையும் கூட்டுறவு முறையில் சாகுபடிக்கு விட வசதி செய்யப்பட்டிருக்கிறது.

நான் முன்பே சொன்னேன், இப்படிப்பட்ட ஒரு சட்டம் கூடிய சீக்கிரத்தில் இந்த சட்ட மன்றத்தில் சமர்ப்பிக்கப்படும் என்று. இப்படிப்பட்ட ஒரு சட்டம் தயாரிக்கப்பட்டு வருகிறது என்றும் முந்திய சட்டசபை கூட்டம் அதாவது சென்ற கூட்டம் முடிவதற்குள்ளாகவே இந்த மசோதா இந்த மன்றத்திற்கு வந்து நிறைவேற்றப்பட்டுவிடும் என்று சொன்னேன். ஆனால் அப்பொழுது வராமல் இப்பொழுது கொண்டு வரப்பட்டிருக்கிறது. அப்பொழுதே பின்னால் வரும் என்று சொன்னேன். இப்பொழுது கொண்டு வரப்பட்டு இந்த மன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது. இதை கூடிய சீக்கிரத்தில் நிறைவேற்ற வேண்டும். இந்தக் கூட்டம் முடிவதற்குள்ளாகவே உச்ச வரம்புச் சட்டம் கொண்டு வந்தபோதே இந்த மசோதாவைக் கொண்டு வரவேண்டும் என்று சொன்னார்கள். கொண்டு வருகிறோம், தயாராகிக் கொண்டிருக்கிறது, கூடிய சீக்கிரம் கொண்டு வந்து நிறைவேற்றப்படும் என்று ஏற்கெனவே சொன்னேன். இப்பொழுது கொண்டு வரப்பட்டிருக்

[Sri M. Bhakavatsalam] [9th November 1961

கிறது. இதை கூடிய சிக்கிரத்தில் நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும். இருந்த போதிலும் இதை பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்ப வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. பொறுக்குக் கமிட்டிக்குப் போனாலும் சிக்கிரத்திலேயே இதை அங்கு பரிசீலனை செய்து இங்கு கொண்டு வந்து இந்தக் கூட்டம் முடிவதற்குள்ளாகவே நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும். சில குறைபாடுகளையெல்லாம் சொல்லியிருக்கிறார்கள். அவைகளையெல்லாம் பரிசீலனை செய்து பார்க்க வேண்டும். என்னென்ன சங்கடங்கள் ஏற்படும் என்பதை பரிசீலனை செய்து இதை நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும். முக்கியமாக ஒரு குறிப்பு. உச்ச வரம்பு சட்டத்தில் சில விதிவிலக்கு கொடுத்திருக்கிறார்கள். மலை தோட்டங்கள், காடுகள், தோட்டங்கள், ப்ளாண்டேஷன்கள் இதற்கெல்லாம் விதிவிலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. அவைகள் அப்படியே இருக்க வேண்டும் என்பதல்ல. எவ்வளவோ தர்ம ஸ்தாபன சொத்துக்கள் இருக்கின்றன. அவைகள் நல்ல முறையில் நிர்வாகம் செய்ய வேண்டும். அதற்கு இருக்கக்கூடிய லட்சியம் நோக்கம் நிறைவேற்றப்பட வேண்டும். அவைகளையெல்லாம் மனதில் கொண்டு அதற்கு வேண்டிய பரிகாரம் தேட வேண்டியதாக இருக்கிறது. அந்த முறையில் இந்த மசோதாவை நிறைவேற்ற வேண்டும் என்ற நோக்கத்துடன்தான் இது கொண்டு வரப்பட்டிருக்கிறது. பொறுக்குக் கமிட்டியில் நன்றாக பரிசீலனை செய்து கூடிய சிக்கிரத்தில் இதை நிறைவேற்றிக் கொடுக்கவேண்டும். இந்தக் கூட்டம் முடிவதற்குள்ளாகவே இதை நிறைவேற்றிக் கொடுத்தால் நலமாக இருக்கும். இல்லாவிட்டால் அடுத்த கூட்டத்திற்குள்ளாக நிறைவேற்றிக் கொடுத்தாலும் போதும். அதாவது டிசம்பரில் கூட்டம் கூடப்போகிறது, அப்பொழுது நிறைவேற்றிக் கொடுத்தாலும் போதுமானது. ஆகவே பொறுக்குக் கமிட்டி இதை நன்றாக பரிசீலனை செய்து இதை நிறைவேற்றிக் கொடுக்க கனம் அங்கத்தினர்கள் உதவ வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, இதை கனம் அங்கத்தினர்கள் எல்லோரும் ஏற்றுக்கொள்வார்கள் என்று நினைக்கிறேன்.

DEPUTY SPEAKER : Motion moved—

"That the Madras Public Trusts (Regulation of Administration of Agricultural Lands) Bill, 1961 (L.A. Bill No. 47 of 1961) be referred to a Select Committee consisting of

1 The Hon. Sri M. BHAKTAVATSALAM.
2 The Hon. Sri C. SUBRAMANIAM.
3 Sri P. G. KARUTHIRUMAN.
4 Sri R. SRINIVASA IYER.
5 Sri T. T. DANIEL.
6 Sri K. S. G. HAJA SHERIFF.
7 Sri R. SUBRAMANIAM.
8 Sri K. R. VISWANATHAN.

9th November 1961] [Deputy Speaker]

9 Sri K. S. SUBRAMANIA GOUNDER.
10 Srimathi Dr. T. S. SOUNDRAM RAMACHANDRAN.
11 Sri A. R. SUBBIAH MUDALIAR.
12 Sri V. K. RAMASWAMY MUDALIAR.
13 Sri D. S. AUTHIMOOLAM.
14 Sri V. K. KOTHANDARAMAN.
15 Sri M. SELVARAJ.
16 Sri A. R. MARIMUTHU.
17. Sri G. NARAYANASWAMI NAIDU.

The motion is before the House for discussion.

**SRI V. SANKARAN** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, பொதுவாக இந்த மசோதா உச்ச வரம்பு சட்டம் வந்தபோதே இந்த மன்றத்தில் சமர்ப்பித்திருக்க வேண்டியது. அப்படி இல்லாமல் தனியாக இப்பொழுது கொண்டு வந்திருப்பது மிகவும் பாராட்டக்கூடியதுதான். தர்ம ஸ்தாபனங்கள் சம்பந்தமாக ஒரு மசோதா கொண்டுவரவேண்டியது அவசியம் என்று அப்பொழுதே குறிப்பிடப்பட்டது. அப்படி அப்பொழுதே கொண்டு வந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். தனியாக இப்பொழுது வந்தாலும் அது நல்லதுதான். சர்க்கார் இதை தனியாகக் கொண்டு வந்ததற்கு உண்மையிலேயே அவர்களை நாம் பாராட்ட வேண்டியதுதான்.

இதில் ஒன்று சொல்லப்பட்டிருக்கிறது. பத்து ஏக்கர் வரைக்கும் வைத்துக்கொள்ளலாம் என்றும் அதற்கு மேல் இருந்தால் அதை குத்தகைக்கு விட்டுவிட வேண்டும் என்றும் இருக்கிறது. குறிப்பாக 11-ஆவது ஷரத்தை எடுத்துக்கொண்டால் அதில் இரண்டு விதமாக இருக்கிறது:

'is due to the non-availability of persons to take on lease the land concerned.'

'is not due to the non-availability of persons to take on lease the land concerned.'

ஆள்கள் அகப்படவில்லை என்றாலும் ஆள்கள் அகப்பட்டு குத்தகைக்கு விடாமல் இருந்தாலும் என்று இரண்டு வகையாக பிரிக்கப்பட்டிருக்கிறது. சாதாரணமாகப் பார்த்தால் தமிழ் நாட்டில் குத்தகைக்கு எடுத்துக் கொள்வதற்கு ஆள்கள் அகப்படவில்லை என்பது கிடையாது. எந்த கிராமத்தை எடுத்துக் கொண்டாலும் "நான் அவெய்லபிலிடி அப் பர்சன்ஸ்" என்பதே கிடையாது. அப்படி ஆள்கள் அகப்படவில்லை என்று சொன்னால் கமிஷனர் அந்த நிலங்களை எடுத்துக்கொண்டு குத்தகைக்கு விடலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கு இடமே இருக்காது. கமிஷனர் எடுத்துக்கொண்டாலும் "நான் அவெய்லபிலிட்டி அப் பர்சன்ஸ்" என்பதே இருக்காது. அப்படி ஆள்கள் அகப்படவில்லை என்றால்

பப்ளிக் ட்ரஸ்ட் நிலத்தை எடுத்துக்கொண்டு சாகுபடிக்கு விடலாம் என்று இருக்கிறது. இது போன்ற நிலைமை ஏற்படுவதற்கு இடமே இல்லை. அதற்கு ஒரு விதி விலக்கு இருக்க வேண்டியதே இல்லை. இப்பொழுது எவ்வளவோ தர்ம ஸ்தாபனங்கள் இருக்கின்றன. 'பவர்புல் இன்ஸ்டிடியூஷன்கள்' இருக்கின்றன. அவைகளின் நிலங்களை ஆதரைஸ்ட் ஆபீசர் என்குயர் செய்து அந்த நிலங்களை எல்லாம் எடுத்துக் கொள்ளலாம். ஆகவே இதுபோன்ற ஒரு ஷரத்து அவசியம் இல்லை. எவ்வளவோ தர்ம ஸ்தாபனங்களுக்கு நூற்றுக் கணக்கான ஆயிரக்கணக்கான நிலம் இருக்கிறது. அவைகளை சரியானபடி ஆதரைஸ்ட் ஆபீசர் எடுத்து குத்தகைக்கு விடலாம். அந்த நிலங்களை எடுத்துக்கொள்வதற்கு ஆட்கள் இல்லை என்று ஆதரைஸ்ட் ஆபீசர் அபிப்பிராயம் தெரிவித்தால் அவைகளை குத்தகைக்கு விடலாம் என்று இருக்கிறது. ஆதரைஸ்ட் ஆபீசராக இருந்தாலும் சரி கவர்ன்மெண்டாக இருந்தாலும் சரி அவற்றை எடுத்துக்கொண்டு குத்தகைக்கு விடலாம்.

DEPUTY SPEAKER: Let the hon. Member finish his speech soon.

12-30 p.m. SRI V. SANKARAN: 'நான்-அவெய்லபிலிட்டி ஆப் பர்சன்ஸ்' என்ற ஷரா அவசியம் இல்லை. ஆள் 'அவெய்லபிள்'-ஆக இருந்து, குத்தகைக்கு விடவில்லையென்றால், ஆதரைஸ்டு ஆபீசர் நேரடியாகக் குத்தகைக்கு விட்டு, அதன் மூலம் வருகிற வரும்படியில் பத்து சதவிகிதத்தை எடுத்துக்கொண்டு பாக்கியைக் கொடுத்து விடுவது என்று கண்டிருக்கிறது. ஒவ்வொரு வருஷமும் பத்து சதவிகிதம் எடுத்துக்கொள்ளவேண்டுமென்ற நிலைமை அவசியம் இல்லை. லெஸ்ஸி கண்டுபிடித்துவிட்டால், நேரடியாகக் காண்ட்ராக்ட் 'என்டர்' செய்து முடித்துக் கொள்ளலாம். அப்படியில்லாமல் ஒவ்வொரு வருஷமும் லீஸ் விடவேண்டுமென்றால், அதில் பல தவறுகள் ஏற்படலாம். ஆதரைஸ்டு ஆபீசருக்கும் சிரமம் ஏற்படலாம். பர்ஸன்ஸ் அவெய்லபிள் ஆக இருக்கும்போது லீஸ் விடவில்லையென்றால், அதற்காக நிர்ணயிக்கப்பட்டிருக்கும் ப்ரொஸீஜர் 'ஸர்க்கூட்ஸ்'-ஆக இருக்கிறது. அதனால் பல கஷ்டங்களும் ஏற்படலாம். "பர்ஸன்ஸ் அவெய்லபிள்"-ஆக இருக்கும்போது 'லீஸ்' விடவில்லையென்றால், நேரடியாக 'லீஸை' முடித்து, காண்டிராக்ட் எக்ஸிக்யூட் பண்ணுவதுதான் முறை.

(Sri A. Govindasamy in the Chair.)

களத்திலேயே நெல்லைப் பிரித்துக் கொடுக்கவேண்டுமென்ற 'ப்ரொவிஷன்' இருக்கிறது. அப்படிக் கொடுக்காவிட்டால் என்ன 'பனிஷ்மென்ட்' என்பது மசோதாவில் குறிப்பிடப்படவில்லை. நெல்லைக் களத்திலேயே பிரித்துக்கொடுக்க வேண்டுமென்ற 'ப்ரொவிஷன்' கண்டிப்பாக இருக்கவேண்டும். மற்றதெற்கெல்லாம் 'பனிஷ்மென்ட்' குறிப்பிட்டிருக்கும்போது, இதற்கும் என்ன பனிஷ்மென்ட் என்று குறிப்பிடப்படவேண்டும்.

9th November 1961] [Sri V. Sankaran]

சாதாரண பயிர்களைப் பொறுத்த வரையில், 40 சத விகிதம் நியாய வாரமாக இருக்கலாம். ஆனால், தோப்புகளைப் பொறுத்த வரையில் அதே அளவு போதுமானதாக இருக்குமா என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும்.

லீஸ் விடும்போது ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். ஆதரைஸ்டு ஆபீசர் தாங்களாகவே சொந்த முறையில் செய்யலாம் என்று இருக்கிறது. அப்படிச் செய்யும்போதுகூட பல தவறுகள் ஏற்படலாம். லீஸ் விடும்போது, கிராமத்திலுள்ள போனபைடி கல்டிவேட்டருக்குக் கிடைக்கும் வண்ணம், அவர்களுக்குப் பூரண பாதுகாப்பு சட்டத்தில் இருக்கவேண்டும். அல்லது விதிகளிலாவது இடம் இருக்கவேண்டும். அப்படியிருந்தால்தான் சட்டம் சரியாக அமுல் நடக்கும். அப்படியில்லாவிட்டால், 'பவர்புல் ஆர்க்கனேஸேஷன்' முதலியவைகள் வேண்டியவர்கள் பெயர்களைப் போட்டு 'பினாமி'-யாகக் காரியங்களை நடத்திக்கொண்டிருப்பார்கள். ஆகவே, கிராமத்திலுள்ள போனபைடி கல்ட்டிவேட்டருக்கு லீஸ் விடவேண்டும். அப்பொழுதுதான் டெனன்ட்ஸ் கோவாபரேடிவ் சொஸைட்டி முதலியவை ஏற்படுத்துவதற்கு மிகவும் அனுகூலமாக இருக்கும். இதுபோன்று பல அனுகூலங்களைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கின்றேன்.

* SRI A. NESAMONY : Sir, I just want to make a few comments upon certain clauses of the Bill so that the Select Committee may reconsider the clauses that are contained in this Bill.

As regards the fair rent now, clause 2 (*l*) of this Bill defines what normal gross produce is. Normal gross produce in respect of any land means the produce which would be obtained, if the rainfall and the seasons were of a normal character from lands of the same class as the land in question, similarly situated and possessing similar advantages. Now whether a particular land is of the same category or of the same class of land in question has to be decided under clause 27 which says : "Notwithstanding any agreement between a public trust and the cultivating tenant, or any decree or order of a Court, either party may apply to the Rent Court for fixation of fair rent or for deciding any dispute arising under this Chapter." Under clause 27 the Rent Court will have to fix the normal gross produce. Now out of the normal gross produce the fair rent is fixed under clause 22 as 40 per cent. The previous clause enacts that there must be agreement between the trust and the lessee whether that agretment can be superseded under clause 27 is a matter for consideration. When the trust and the tenants have agreed upon the fair rent among themselves and executed the agreement, why should their contract be cancelled unless it is vitiated by any fraud or coercion or anyone of the things that usually vitiate the contract? So once an agreement is reached between the lessor, trust and the lessee, the contract has to be respected and no party should go before the Rent Court after the execution of the contract.

Secondly, as regards payment under clause 23, the fair rent may be paid in cash or in kind. That clause is governed by its subject heading. There is no possibility of enforcing the proviso provided that where the crop raised is paddy, the public trust shall have the right to insist that the rent shall be paid in kind. So the heading of the clause has to be altered or a separate clause should be provided whereby this proviso would be made a natural condition. For example, the lands owned by most of the churches are cultivated and if they are cultivated with paddy crop, the fair rent is collected in kind i.e., paddy for feeding the orphans in the orphanages or the inmates in the boarding homes or in hospitals or in leper homes ond other charitable institutions. So it is paddy that they want. So if the agreement provides for the payment of paddy, that has to be respected and it should be governed by a separate clause and not by proviso to clause 23 and the heading of the clause makes an option of payment either in kind or in cash.

One more thing which I wish to bring to the notice of the Select Committee is that clause 22 makes provision by which the public trust shall be entitled to one-fifth of the straw or stalk of all the crops. Now all these charitable institutions want paddy in kind. Straw is of no use to them. Therefore, by any means it should be converted into paddy or included in the agreement so that the one-fifth of the straw which is provided under that clause be converted into paddy and form part of the rent payable. I, therefore, request that this is a matter to be considered by the Select Committee.

Clause 21 provides for the payment of public charges. But the Bill does not seem to enumerate the public charges which are payable by the tenant.

Clause 17 seems to be opposed to all notions of law.

It is stated there, 'A denial of the public trust's title under a *bona fide* mistake of fact is not wilful.' Having accepted the lease from the trust, how rould there be any *bona fide* mistake arising and the denying of the title of the trust? That is not clear.

I now refer to another clause, viz., clause 23 which makes provision for reduction of rent. In sub-clause (2) it is stated—'Whenever adverse seasonal conditions result in the reduction of the gross produce from any particular crop to the extent of more than 25 per cent . . .' The expression 'more than 25 per cent' seems to be elastic. A certain fixed percentage has to be prescribed in that regard to allow reduction in the payment of the fair rent. These things may be considered by the Select Committee when they consider the various clauses of the Bill.

* **SRI R. SRINIVASA IYER:** தலைவர் அவர்களே, இந்த மசோதா, உச்ச வரம்பு சட்டத்திலிருந்து தர்ம ஸ்தாபன சொத்துக்களை விலக்கினதற்காக, இந்தச் சட்டசபைத் தொடரிலேயே

9th November 1961] [Sri R. Srinivasa Iyer]

இதைக்கொண்டு வந்து நிறைவேற்றிவிடுகிறேன் என்று கனம் அமைச்சர் அவர்கள் கொடுத்த வாக்குறுதிக்கிணங்க—இப்போது கொண்டுவரப்பட்டிருக்கிறது. இந்தச் சபையிலேயே நிறைவேற்றப்பட வேண்டுமென்றும், பிரேரேபிக்கப்பட்டிருக்கிறது. இதில் சில குறைபாடுகள் இருக்கின்றன. அதை இங்கே வெளியிட விரும்புகிறேன்.

முக்கியமாக முஸ்லீம்களில் வாக்ப் என்று, தர்மத்திற்காக எழுதி வைத்ததும் அல்ல, இதரர்களுடைய உபயோகத்திற்காக வைத்ததும் இல்லையென்ற ரீதியில்—அதாவது அந்தச் சொத்தை விற்க முடியாத அளவுக்கு சொல்ப விகிதாசாரத்தை மட்டும் மசூதிக்கு என்று கொடுத்துவிட்டு பாக்கியை அந்த அந்தக் குடும்பத்தவர்களே அனுபவித்துக் கொள்ளும்படியாக எழுதி வைக்கப்பட்டுள்ள சொத்துக்கள் அநேகம் இருக்கின்றன. அம்மா நிரி எழுதி வைக்க அவர்களுக்குத் தனியாகச் சட்டமே இருக்கிறது. அவை இந்தச் சட்டத்தின் கீழ் வருமா வராதா என்பது தெரியவில்லை. நியாயமாகப் பார்த்தால் அவைகளும் இந்தச் சட்டத்திற்குள் இருந்தால்தான் உணவு உற்பத்தி பெருகும். நியாயவார அடிப்படையில் விவசாயிகளுக்கு அனுகூலம் ஏற்படும் என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

'அக்ரிகல்சர்' என்பதற்கு உச்சவரம்புச் சட்டத்தில் என்ன விளக்கம் கொடுக்கப்பட்டிருக்கிறதோ அத்தனை விளக்கமும் இங்கே கொடுக்கப்பட்டிருக்கிறது. இதற்குத் தேவையில்லையென்று கருதுகிறேன். மத சம்பந்தமான சொத்துக்களைக் குத்தகைக்கு விட்டு, உணவு உற்பத்தி பாதிக்கப்படாத வகையில் கவனம் செலுத்துவதற்காக மட்டும் கொண்டுவரப்பட்டிருக்கிற இந்தச் சட்டத்தில் அவ்வளவு விளக்கமும் தேவையில்லையென்று கருதுகிறேன்.

அடுத்தபடியாக இந்த தர்மஸ்தாபனங்கள், கோயில்கள் எல்லாம் பர்சனல் கல்டிவேஷன் என்று பத்து ஸ்டாண்டர்டு ஏக்கர் வைத்துக் கொள்ளலாம் என்று இருக்கிறது. ஒன்று பர்சனல் கல்டிவேஷன் என்றே வைத்துக்கொள்ளவேண்டாம், எல்லாவற்றையும் குத்தகைக்கு விட்டுவிட வேண்டும் என்று செய்துவிடலாம். பண்ணைச் சாகுபடி என்று தர்மஸ்தாபனங்களுக்குத் தேவையில்லையென்று சொல்லிவிட்டால் கூடப் பரவாயில்லை. குத்தகைக்கு விட்டு நிச்சயமாக, நிரந்தரமாக 40 சத விகிதம் என்று அதில் கிடைக்கிற வரும்படியே அவர்களுக்குப் போதுமானது. ஆனால் சொந்தச் சாகுபடிக்கு அனுமதிப்பது என்றால் பத்து ஸ்டாண்டர்டு ஏக்கர் என்பது மிகமிகக் குறைவு. எக்கனாமிக்கலாக இது இருக்காது. ஒரு ஆள், ஒரு ஜோடி மாடு என்று வைத்து பண்ணையில் வைப்பதாக இருந்தால் கட்டுபடியாகக் கூடிய வகையில் அந்த அளவை இன்னும் உயர்த்த வேண்டும், அல்லது பண்ணைச் சாகுபடியே வேண்டாம் என்று செய்துவிடவேண்டும். இதை பொறுக்குக் கமிட்டியார் நன்கு கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

[Sri R. Srinivasa Iyer] [9th November 1961.

அடுத்தபடியாக இந்தப் பத்து ஸ்டாண்டர்டு ஏக்கர் என்று சொல்வதிலேயே இலுப்பத்தோப்பு, தென்னந்தோப்பு, மாந்தோப்பு, நந்தவனம் முதலியவைகளைச் சேர்க்கக்கூடாது. முக்கியமாக இந்த மசோதா எதற்கு என்று சொன்னல் ஒரே வருஷத்தில் ஒரு போகம், இருபோகம், முப்போகம் வரையில் மகசூல் அறுவடை செய்கின்ற மாசூல் விளையும் நிலங்களுக்குத்தானே தவிர தோப்புத்துரவுகளை எல்லாம் இதற்குள் கொண்டுவந்துவிடக் கூடாது. ஆகவே இலுப்பத்தோப், தென்னந்தோப்பு பழவகை மரங்கள் இவைகள் எல்லாம் வருஷத்திற்கு ஒரு முறை குத்தகைக்கு விடக் கூடியது. அவற்றுக்கு இதில் இருந்து விலக்கு கொடுத்துவிடவேண்டும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக வாரச்சாகுபடி செய்தால் 40 சதவிகிதம் களத்து மேட்டில் கொடுக்கவேண்டுமென்று இருக்கிறது. களத்து மேட்டில் வாரத்தைக் கொடுக்காமல் எடுத்துக்கொண்டு போகக் கூடாது என்று இருக்கிறது. ஆனல் ஒரு மாதத்திற்குள் குத்தகை பணத்தைக் கொடுக்கலாம் என்றும் இருக்கிறது. இது ஒன்றுக்கொன்று முரண்பாடாக இருக்கிறது. வாரத்தைக் களத்து மேட்டில் கொடுக்கவேண்டும், இல்லாவிட்டால் 424, ஐ.பி.ஸி. செக்ஷன்படி நடவடிக்கை எடுக்கலாம், எவிக்ஷன் ஆக்ட்படி நடவடிக்கை எடுக்க இடமுண்டு, அதுபோலவே இங்கும் இருக்கவேண்டும். தர்மஸ்தாபனங்களுக்கு நைவேத்தியம் முதலியவற்றுக்காக நெல்தான் வேண்டும். களத்து மேட்டில் நெல்லாக அளக்கவே இந்தச் சட்டத்தில் வகை செய்யப்படவேண்டும். மீறி நெல்லைக்கொண்டு போய்விட்டால் போன வருஷத்தில் ஜாஸ்தி விலை என்ன விற்றதோ அந்த விலைக்கு ஒரு மாதத்திற்குள் பணத்தைக் கட்டவேண்டும் என்று செய்யவேண்டும். மாதாமாதம் வெளியிடுகிற விலைவாசிப்படி என்று இருக்கக் கூடாது. இருந்தால் குறைந்த விலைக்கு விற்றதாகச் சொல்லி பணத்தைக் கட்டிவிட்டு அவர்கள் உயர்ந்த விலைக்கு விற்றுக்கொள்ள சந்தர்ப்பம் ஏற்படும். தர்மஸ்தாபனங்களுக்கு விலைவாசியில் ஏற்படக்கூடிய லாபம் போய்விடும்.

அடுத்தபடியாக பர்சனல் கல்டிவேஷன் சம்பந்தப்பட்ட வரையில் டெபனிஷன் போடப்பட்டிருக்கிறது. அதில் ஹையர்டு லேபர் என்றுதான் இருக்கிறது. **Hired Stock** என்றும் இருக்க வேண்டும். எவிக்ஷன் சம்பந்தப்பட்ட வரையில்—என்ன என்ன காரணங்களுக்காக எவிக்ட் பண்ணலாம் என்று போடப்பட்டிருக்கிறது. அத்துடன் "வாரத்தைக் களத்து மேட்டில் கொடுக்காவிட்டால்" என்பதையும் சேர்க்கவேண்டும். மேலும் ஆதரைஸ்டு ஆபீசர் அவர்களே எடுத்து குத்தகைக்குக் கொடுக்கலாம் என்று இருக்கிறது. தவிர சாகுபடி முச்சிலிக்கா 3 பேருக்கு எழுதிக் கொடுக்கவேண்டும் என்பதில் தர்மகர்த்தா சார்பில் ஆதரைஸ்டு ஆபீசரே கையொப்பம் இடலாம் என்று வைக்கலாம். கோர்ட்டில் பார்டிக்காக கையெழுத்திடுவது உண்டு. அதுபோல இதற்கும் போடலாம் என்று செய்யலாம்.

9th November 1961.] [Sri R. Srinivasa Iyer]

அடுத்தபடியாக, "Restoration of possession" -க்கு ஒரு செக்ஷன் இருக்கிறது. செக்ஷன் 18-ல் எந்தக் காலத்திற்குப் பிறகு டெனன்டை அப்புறப்படுத்தினல், "Restoration of possession" என்று இல்லை. ஆக்ட் 14/52-ல் ஒரு தேதி, ஆக்ட் 25/55-ல் ஒரு தேதி குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதே மாதிரி இதிலும் ஒரு குறிப்பிட்ட தேதிக்குப் பிறகு அப்புறப்படுத்தப் பட்டால், "Restoration of possession" என்று இருக்க வேண்டும். இதில் தேதி விட்டுப் போயிருக்கிறது. குறுகிய காலத்திற்குள் பெரிய ஒரு மசோதாவைத் தயாரித்திருப்பதால் சில விஷயங்கள் விட்டுப் போயிருக்கலாம். 1961-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 29-ம் தேதியில் இந்த மசோதா பிரசுரமாகி இருக்கிறது. ஒன்று அந்தத் தேதியைப் போட வேண்டும். அல்லது உச்ச வரம்புச் சட்டப்படி 1960-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 6-ம் தேதிக்குப் பிறகு குத்தகைதாரர்களை அப்புறப்படுத்தினல் அவர்களுக்கு "Restoration of possession" கொடுக்கவேண்டியது என்று இருக்க வேண்டும். அந்தமாதிரிக் குறிப்பிட்ட தேதி இருக்கவேண்டும்.

இந்த மசோதாவில் "பேர் ரெண்ட்" போடப்பட்டிருக்கிறது. "பேர் ரெண்ட்" எந்த மாசூலுக்கு என்று இல்லை. முதலில் சொன்னமாதிரி வருஷா வருஷம் சாகுபடி செய்து அறுவடை செய்யக்கூடிய மாசூலுக்கு மட்டுமா என்று தெரியவில்லை. தானியங்களான நெல், கம்பு, சோளம், கேழ்வரகு போன்று அப்போதைக்கப்போது சாகுபடி செய்து அறுவடை செய்யக்கூடியதற்கு மட்டுந்தான் 40 சதவிகிதம் என்று குறிப்பிட வேண்டும். இவைகளோடு தென்னந்தோப்பையும், மற்ற மரங்களையும் அனுபவித்துக் கொண்டுவரும்படி கொடுக்கமாட்டேன் என்று குத்தகைக்காரன் சொல்லுகிருன். மரங்களுக்கெல்லாம் குத்தகை காண்ட்ராக்ட்படி தான் நடக்கவேண்டும்.

"டிஸ்ட்ரிக்ட் கோர்ட்" என்பதற்கு "டெபனிஷன்" இரண்டு இடத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது. தர்மகர்த்தா குத்தகைக்கு விடுவது என்ற இடத்தில் ஒரே வாசகம் ஐந்து இடத்தில் கூறப்பட்டிருக்கிறது. இவையெல்லாம் ஒரே இடத்தில் வரலாம். மேலும் இந்தச் சட்டத்தை அமுலாக்குவதற்கான அதிகாரம் ஜில்லா கலெக்டரிலிருந்து கவர்ன்மெண்ட் வரை பல அதிகாரிகளுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. இத்தனை பேருக்கு அதிகாரம் இருக்க வேண்டிய அவசியமில்லை. இவ்வளவு அதிகாரிகள் தேவையில்லை. ஆதரைஸ்டு ஆபீசர், கலெக்டர், கோர்ட் என்று இருந்தால் போதும். எல்லாவிதமான அதிகாரத்தையும் சேர்த்துப் போட்டால் இந்த மசோதா "சிம்ப்ளிபை" ஆகிவிடும். காலதாமதம் ஆகாது. சாகுபடி, எவிக்ஷன் ஆகியவை சீக்கிரத்தில் நடக்க வேண்டிய விஷயம்.

"Tenant farming societies" பற்றி நல்ல முறையில் செக்ஷன் போடப்பட்டிருக்கிறது. இதில், "லாண்ட் ஓனர்" சொசைடியில் மெம்பராகவில்லை என்பது முக்கியமான விஷயம். கோவாப்ப

ரேட்டிவ் சொசைடிஸ் ஆக்டுப்படிதான் நடக்க வேண்டும் என்றால் பிறகு அந்த சொசைடி பேரில் "லாண்ட் ஓனர்" சிவில் கோர்ட்டில் பிராது போடுவது முடியுமா? பாக்கி ஏற்பட்டால் என்ன செய்வது? என்பது தவிர்க்க முடியாது. இவையெல்லாம் குறைபாடுகள். "லாண்ட் ஓனரை" மெம்பராகச் சேர்த்து விட வேண்டும். அவருக்கும் அது ரொம்ப நல்லது. அதற்குக் கண்டிஷன் போட்ட பிறகு ஆர்பிட்ரேஷன் மூலம் நடவடிக்கை எடுக்க வழி வேண்டும். அப்படி இல்லையென்று சொன்னால் கோர்ட்டுக்குப் போகவேண்டுமா, கோர்ட்டுக்குப் போக முடியாதா என்பது சர்ச்சைக்கு இடமாகக் கூடிய விஷயமாகிவிடும்.

"Power of Government to issue orders and directions to the authorized officer, etc.", என்பது 48-வது செக்ஷனில் இருக்கிறது. இது வேறு எந்த ஆக்டிலும் இல்லை. இதில் புதிதாக இருக்கிறது. இந்த ஆக்ட் பற்றி "ஜெனரல் கோக்டர்"-ஆக "ஆதரைஸ்டு ஆபீசருக்கு" "ஆர்டர்ஸ் அண்டு டைரக்ஷன்" போடலாம் என்ற அதிகாரம் அரசாங்கத்திற்கு இருப்பது சரியல்ல என்று தெரிகிறது. ஆக்ட் 24/52 படி பண்ணை நிலங்கள்கூட 10 ஏக்கருக்கு மேல் இருந்தால் குத்தகைக்கு விடவேண்டுமென்று சட்டமிருக்கிறது. பண்ணை ஆளை விலக்கும் காலத்தில் அந்த ஆக்டின் படி நஷ்ட ஈடு கேட்பான். அவனுக்கே குத்தகைக்கு விடவேண்டுமென்று கேட்பான். **Act 14/52 Repeal** ஆக்க வேண்டும். இந்த மசோதாவில் பல இடங்களில் ஒரே வாசகம் திரும்பத் திரும்ப வந்திருக்கிறது. அதையெல்லாம் நல்ல முறையிலே பரிசீலனை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு இந்த மசோதாவை வரவேற்று என்னுடைய உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

**Sri V. K. KOTHANDARAMAN :** கனம் தலைவர் அவர்களே, தேவாலயங்கள், மடங்கள் பற்றிய இந்த மசோதா பொறுக்குக் கமிட்டிக்கு விடப்பட்டிருக்கிறது. ஆரம்பத்திலும் தேவலாயங்கள், மடங்கள் ஆகியவற்றுக்குச் சொந்தமாக இருக்கக் கூடிய நிலங்களுக்குக் கூட வரம்பு கட்டவேண்டுமென்ற முறையில் வந்தது. அதற்குப் பிறகு அதை மாற்றி, திருத்தியமைக்கப்பட்டு இப்போது ஒவ்வொரு கட்டளைக்கும் 10 ஸ்டாண்டர்டு ஏக்கர் சொந்தமாக சாகுபடி செய்யலாம் என்று செய்யப்பட்டிருக்கிறது. மற்ற நிலத்தை விவசாயிகளுக்கு எப்படிக் கொடுத்து விவசாயம் செய்யவேண்டுமென்ற அடிப்படையில் இந்த மசோதா வந்திருக்கிறது. இது பற்றிச் சிலர் நல்ல அரிய ஆலோசனைகள் கூறியிருக்கிறார்கள் என்று கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஏற்கனவே, ஓரிஜினல் பில்லில் பலவித விலக்குகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த மசோதா எந்த முறையிலே கொண்டுவரப்பட்டிருக்கிறது? ஏற்கனவே நிறைவேற்றப்பட்டுள்ள மசோதாவில் அவர்களுக்கே சொந்தமாகக் கூடிய முறையிலே விதி விலக்கு என்ற பெயரில், அது நிறைவேற்றப்பட்டு அதைப் போல இதையும் நிறைவேற்ற இப்படிப் பொறுக்குக் கமிட்டிக்குக் கொண்டு வரக்கூடிய நிலைமை ஏற்பட்டதா என்று நினைக்கவேண்டி

யிருக்கிறது. இதற்குப் பொறுக்குக் கமிட்டி அவசியமே இல்லை. ஆனாலும் போடப்பட்டிருக்கிறது. இப்போது இதிலே இருக்கக் கூடிய ஒரு சில குறைபாடுகளைப் பற்றிச் சொல்ல நான் ஆசைப் படுகிறேன்.

ஒரு கட்டளைக்கு 10 ஸ்டாண்டர்டு ஏக்கர் சொந்தமாகச் சாகுபடி செய்யலாம் என்று இருக்கிறது. கட்டளை என்று சொன்னால் யார் யார் என்று தெளிவாகத் தெரியவில்லை. பூ கொண்டுவந்து கொடுக்கிறவர் ஒரு கட்டளை அதைக் கட்டிக் கொடுப்பவர் ஒரு கட்டளை, சந்தனம் அரைப்பவர் ஒரு கட்டளை, அர்ச்சனை செய்பவர் ஒரு கட்டளை என்று என்னென்னவோ பெயர்களில் கட்டளைகள் இருப்பதாகக் கேள்விப்படுகிறேன்.

(Deputy Speaker in the Chair.)

ஆகவேதான் இந்தக் கட்டளைகளைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற காரணத்தால் அமைச்சர் அவர்களுக்குக் கடந்த மாதம் ஒரு கடிதம் எழுதியிருக்கிறேன். அந்தப் புள்ளி விவரங்களைத் தெரியப்படுத்த வேண்டுமென்று மேலதிகாரிகளுக்குச் சொல்லியிருப்பதாகச் சொல்கிறார்கள். அது வந்த பிறகுதான் நமக்குத் தெரியும். கட்டளை என்பதைப் பற்றி ஏன் தெரிந்து கொள்ளவேண்டுமென்கிறேன் என்றால், ஏற்கனவே நிறைவேற்றப்பட்டுள்ள மசோதாவில் 1955-ம் வருஷத்திலிருந்து உச்ச வரம்பு கொண்டுவரப் போகிறோம் என்று சொல்லிக் கொண்டே வந்து 1960-ம் வருஷத்தில் கொண்டு வந்த காரணத்தினால்தான். இந்த ஐந்து வருஷ காலத்தில் அதை எப்படி எல்லாம் மாற்றி, திருத்தி எழுதிக் கொள்ளவேண்டுமோ அவ்வாறு திருத்தி எழுதிக் கொண்டார்கள். அதேபோல் 1955-ல் இல்லாத கட்டளைகளை இப்போது இருப்பதாகச் செய்து ஒரு கட்டளைக்குப் பத்து ஏக்கர் சாகுபடி செய்யலாம் என்று செய்தால் அதில் பலன் இல்லை. ஆகவேதான் எந்தெந்த வருஷத்தில் எந்தெந்தக் கட்டளைகள் ஏற்படுத்தப்பட்டது என்பதைப் பற்றிய விவரங்களை எல்லாம் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. ஆகவே, இந்த மாதிரி ஒரு கட்டளைக்கு 10 ஸ்டாண்டர்டு ஏக்கர் என்று இருப்பதைவிட ஒரு ஸ்தாபனத்திற்கு 10 ஸ்டாண்டர்டு ஏக்கர் என்று இருந்தாலே போதுமானது. கனம் ஸ்ரீனிவாசய்யர் அவர்கள் நெய்வேத்தியத்திற்கு இல்லையென்று சொன்னார்கள். விவசாயம் செய்து பாடுபடக் கூடியவர்களில் 100-க்கு 90 பேர் ஹரிஜன தாழ்த்தப்பட்ட மக்கள் தான். அவர்களுடைய குழந்தைகள் நெய்வேத்தியத்திற்கு வழி இல்லாமல் இருக்கின்றன. ஆகவே, நெய்வேத்தியத்திற்கு இல்லை யென்று பார்ப்பது சரியல்ல. கூடுமான வரையில் சிக்கனமான முறையில் செய்யவேண்டும். மகாராஜாக்களை ஒழித்துவிட்டோமென்று நாம் சொன்னாலும் கம்பீரமான வகையில் வாழ்க்கை நடத்தக்கூடிய நிலையில் இந்த மடாலயங்கள் இருந்து வருகின்றன என்பது நான் சொல்லாமலேயே கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரியும். எனக்கு முன்னால் பேசிய நண்பர்கள் இதைப்பற்றி

[Sri V. K. Kothandaraman] [9th November 1961.

தெளிவாக எடுத்துக் கூறியிருக்கிறார்கள். ஆகவே ஒரு மடத்திற்கு பத்து ஸ்டாண்டர்ட் ஏக்கர் மட்டும் இருந்தால் போதும் என்று தீர்மானிப்பதுதான் சரியாக இருக்கும் என்பது என் அபிப்பிராயம்.

இதுபோன்று ஒரு குடும்பத்திற்கு ஐந்து ஸ்டாண்டர்ட் ஏக்கர் என்ற அளவில் இருக்கவேண்டும் என்று சொல்லுகிற இந்த நேரத்தில், சில மடத்தின் நிலங்களில் யாருமே விவசாயம் செய்ய முன்வரவில்லை, ஆகவே சொந்த சாகுபடிக்கு எடுக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது என்ற நிலைமை வரக்கூடாது. நிலங்களிலிருந்து ஏற்கனவே வெளியேற்றப்பட்டிருந்த விவசாயியாக இருந்தாலும் சரி, அல்லது இப்போது வேறு விவசாயம் செய்துகொண்டிருக்கிறவர்களாக இருந்தாலும் சரி, யார் விவசாயம் செய்ய விரும்பி முன் வருகிறார்களோ அவர்களுக்கு விவசாயத்திற்கு கொடுக்கவேண்டும். அப்படி யாரும் கிடைக்கவில்லை என்று சட்டென்று சொல்லிவிட்டால், நல்ல முறையில் பத்திரிகையில் விளம்பரம் செய்யவேண்டும். அப்படி விளம்பரம் செய்வதாக இருந்தால் வெளியில் இருக்கக்கூடியவர்களும் இதைப் பார்த்து விவசாயம் செய்வதற்கு முன் வருவார்கள். அந்த அடிப்படையில் பார்த்து விவசாயிகளுக்கு நிலங்களை விநியோகிக்க வேண்டும் என்பதையும் இந்த நேரத்தில் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும், இந்த மசோதா எந்த தேதியிலிருந்து நிறைவேறுகிறதோ அந்த தேதியிலிருந்து அமல் செய்யப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விதமில்லாமல் 1955-ம் ஆண்டிலிருந்தே இதை அமல்படுத்தக்கூடிய அளவுக்கு கொண்டு வந்தால்தான் உபயோகமிருக்கும். ஏற்கனவே நிறைவேற்றிய மசோதாவில் ஏற்பட்ட பல ஊழல்களை இதன் மூலம் தவிர்க்க முடியும் என்று . . .

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மசோதாவை நிறைவேற்றியது இந்த மன்றம். ஆகவே அதில் ஊழல்கள் இருக்கின்றன என்று சொல்வது சரியல்ல, அது மிகவும் தவறு கூட.

SRI V. K. KOTHANDARAMAN : ஊழல் என்ற பதம் வேண்டுமென்றால் சரியில்லாமல் இருக்கலாம். ஆனால் நாம் மசோதாவை நிறைவேற்றிய நேரத்தில் எவ்வளவோ பேர்கள், பினாமி மாறுதல்கள் செய்து கொண்டது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். அந்த மாதிரியான தவறுகள் ஏற்படாமல் இருக்கவேண்டும் என்பதுதான் என்னுடைய கோரிக்கை.

அதோடு களத்திலேயே நெல்லை கொண்டுவந்து கொடுக்க வேண்டும் என்றும், இல்லையென்றால் உடனடியாக அவர்கள்மீது நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் சொல்லுவதுபோல் இருக்கிறது. களத்திலேயே நெல்லை கொடுப்பதற்கு விவசாயிகள் தயாராக இருந்தாலும்கூட, அதை உடனடியாக பெற்றுக்கொள்வதற்கு அவர்கள் தயாராக இருக்கமாட்டார்கள். அதற்கு மாறாக

9th November 1961] [Sri V. K. Kothandaraman]

என்னிடம் நேரில் தகவல் தெரிவிக்கவில்லை; என்னை கூப்பிடாமலேயே நெல்லை கொண்டுபோய் விட்டார்கள் என்ற தகராறுகள் எல்லாம் வரக்கூடும். இதையெல்லாம் கூடுமான வரையில் இதற்கென்று இருக்கக்கூடிய அதிகாரிகள் தடுப்பதற்கு முயற்சி எடுக்க வேண்டும். இதற்கு மாருக விவசாயிகள் பேரில் பழிவாங்கக்கூடிய நிலைமை ஏற்படக்கூடாது. இப்போதுள்ள நிலைமையைப் பார்த்தால் பழிவாங்கக்கூடிய மனோபாவம் இருப்பதாகத் தெரிகிறது. அதோடு இப்போது கொண்டு வந்திருக்கக்கூடிய மசோதாவை இப்போதே நிறைவேற்றியிருக்கலாம். ஆனல் இப்போது இது பொறுக்கு குழுவுக்குப் போகப் போகிறது. ஆகவே பொறுக்குங் குழுவுக்குப் போவதின் காரணமாக இந்த மசோதா இன்னும் நல்ல முறையில் செழுமையடைந்து வரவேண்டுமே ஒழிய மடாதிபதிகளை திருப்திபடுத்தக்கூடிய வகையில் அமையக்கூடாது என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். இதில் மடாதிபதிகள் கருத்துக்கள் என்ன என்பதெல்லாம் செலக்ட் கமிட்டியின் முன் வரும்போது தெரியும், கஷ்டப்பட்டு வான்கின நிலங்களுக்கே உச்சவரம்பு கொண்டுவந்திருக்கும்போது ஏன் மடங்களுடைய நிலங்களுக்கு மட்டும் உச்சவரம்பு கொண்டுவரக்கூடாது என்பதுதான் நமக்கு புரியவில்லை. தர்மத்திற்காக கொடுத்த சொத்துக்களை யாரும் சொந்தம் என்று எடுத்துக்கொள்ள முடியாது என்று சொன்னல், அது காலம் போகப் போக நிச்சயமாக மாறியே தீரும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். ஆகவே இந்த மசோதாவின் மூலம் ஏழை விவசாயிகள் பாதிக்காத வகையில் இந்த மசோதாவை செலக்ட் கமிட்டியில் அமைக்க வேண்டும். அதற்கு போதிய அளவில் அரசாங்கம் கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

* **Sri M. SELVARAJ**: மதிப்பிற்குரிய சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, அறநிலையங்களுக்கும், மடாலயங்களுக்கும் இருக்கின்ற நிலங்களுக்கு கட்டுப்பாடு இருக்கவேண்டும் என்ற முறையில் கொண்டு வந்திருக்கின்ற மசோதாவை பொதுவாக நான் வரவேற்கிறேன். ஏற்கனவே இந்த மன்றத்தில் நிலத்திற்கு உச்சவரம்பு கட்டவேண்டும் என்பதற்காக சட்டம் கொண்டுவந்த போது, எதிர்க் கட்சியிலுள்ளவர்கள், இந்த மசோதாவிலிருந்து மடாலயங்களுக்கும், அறநிலையங்களுக்கும் விதிவிலக்கு அளிக்கக்கூடாது என்று எடுத்துக் கூறினர்கள். அதற்கிணங்க கனம் அமைச்சர் அவர்கள் இப்போது இந்த மசோதாவை கொண்டு வந்திருக்கிறர்கள். அதற்காக நாம் அவர்களை பாராட்டகடமைப்பட்டிருக்கிறோம். மேலும் அறநிலையங்களுக்கும், மடங்களுக்கும் கனம் கோதண்டராமன் அவர்கள் கூறியது போன்று டிரஸ்ட், அல்லது கட்டளை என்ற பெயரில் 10, 15 ஏக்கர்கள் விட்டுக்கொடுப்பது என்ருல், இதற்கென்றே 150 ஏக்கர்கள்வரை ஒதுக்கவேண்டிய நிலைமை ஏற்படுகிறது. அவைகளை எல்லாம் செலக்ட் கமிட்டிக்கு வருகின்ற நேரத்தில் அங்கத்தினர்கள் சற்று கவனமாக சிந்தித்துப் பார்த்து, அதற்குத் தகுந்தபடி இதற்கான

"டெஃபினிஷனே" தயாரிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். கட்டளைக்கு 10 ஏக்கர் அல்லது 15 ஏக்கர்கள் என்று ஒதுக்காமல் ஒரு ஸ்தாபனத்திற்கு மொத்தமாக 10 ஏக்கர் என்று ஒதுக்கப்படக்கூடிய நிலை. இந்த மசோதாவின் மூலமாக நான் வரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் இந்தச் சட்டத்தின் மூலமாக ஏழை எளிய விவசாயி களை நிலங்களிலிருந்து வெளியேற்றக்கூடிய நிலைமை ஏற்படக் கூடாது. ஏதோ இப்போது குறைந்தது ஐந்து ஸ்டாண்டர்ட் ஏக்கர்களாவது ஒருவர் குத்தகைக்கு வைத்திருக்கவேண்டும் என்று ஏதோ சில சட்டதிட்ட விதிகள் அமைத்திருக்கிறோம். அற நிலையங்களுக்கும், மடாலயங்களுக்கும் கொடுக்கவேண்டிய பங்கு தொகையை, கொடுக்கவேண்டிய நேரத்தில் கொடுக்கவில்லை என்றால் அவர்களை நிலத்திலிருந்து வெளியேற்றக்கூடிய நிலை ஏற்படக்கூடும். ஆகவே இதில் விவசாயிகளை நிலத்திலிருந்து வெளியேற்றாத நிலைமையில் அவர்களுக்குப் போதிய பாதுகாப்பு கொடுக்க வழிவகை செய்யவேண்டும் என்றும் கேட்டுக்கொள் கிறேன். மேலும் அவர்கள் கொடுக்கவேண்டிய பங்குத் தொகை யைப் பார்க்கும்போது, பம்பு செட் மூலமாக பாசனம் செய்து கொண்டிருப்பவர்கள் 40 சதமானம் கொடுக்கவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் பம்பு செட்டுக்கு ஏற்படுகின்ற மின்சார செலவு, அது சம்பந்தப்பட்ட எல்லா செலவுகளையும் அந்த நிலத்தை யார் குத்தகைக்கு ஏற்றியிருக்கிறார்களோ அவர் களே ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது சரியல்ல, ஆகவே இதை மாற்றி அமைக்கவேண்டும். அதற்கு மாறாக எந்த தர்ம ஸ்தாபனத்தின் பேரில் அந்த நிலம் இருக் கிறதோ அவர்களே இந்தச் செலவுகளை ஏற்றுக் கொள்ள வேண்டும். இல்லையென்றால் இப்போது 40 சதமானம் என்றிருப்பதை மாற்றி 25 சதமானம் என்று திருத்தி அமைக்க வேண்டும். அப்போதுதான் விவசாயிகள் பொருளாதாரத் துறையில் ஓரளவுக்கு முன்னேற முடியும். ஆகவே இப்படிப்பட்ட சில சிக்கலான பிரச்னைகள் வரும் போது அவைகளை பொறுக்குக் கமிட்டியில் நன்கு பரிசீலனை செய்து ஆவன செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

மேலும், தோப்புகள் போன்றவைகளுக்கு இதிலும் விதிவிலக்கு இருக்கவேண்டும் என்று ஒரு சில அங்கத்தினர்கள் சொன்னார்கள். விதிவிலக்கு இல்லாமலேயே இப்போது கட்டளை ஒன்றுக்கு பத்து ஏக்கர் இருக்கவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கு மேலும் விதிவிலக்கு என்று சொல்வதாக இருந்தால் இந்த மசோ தாவினுடைய நோக்கமே வெற்றியடைய முடியாது. ஆகவே ஒரு ஸ்தாபனத்திற்கு 10 ஏக்கர் என்று மட்டும் கொடுப்ப தற்கு வழிவகை செய்யவேண்டும். இன்னும் இது போன்ற பல பிரச்னைகளையும் கவனித்து பொறுக்குக் குழு ஆவன செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

9th November 1961]

SRI D. S. AUTHIMOOLAM : மிஸ்டர் டெப்டி ஸ்பீக்கர் ஸார், இந்த மசோதாவைப் பற்றி நினைக்கும்போது, ஒரு பக்கம் சிரிப்பு ஏற்படுகிறது. ஏனென்றால் எப்போதுமே நிலம் சம்பந்தமான கொள்கையில் சர்க்காருடைய தெளிவான அபிப்பிராயத்தைக் காண முடியவில்லை. இது சம்பந்தமாக முக்கியமாக நாலைந்து மசோதாக்கள் கொண்டுவரப்பட்டிருக்கின்றன. தஞ்சாவூர் பண்ணையாட்கள் சட்டம், டெனன்ட்ஸ் ப்ரொடக்ஷன் ஆக்ட், ஃபேர் ரென்ட் ஆக்ட், வினோபாஜியினுடைய பூமிதான இயக்கத்தின் விளைவாக ஏற்பட்ட ஒரு சட்டம் இப்படி பல சட்டங்கள் கொண்டுவந்திருக்கிறீர்கள். கடைசியாக நிலத்திற்கு உச்சவரம்பு கட்டவேண்டும் என்ற சட்டம் வருகிறது என்று சொல்லி, அதையும் கொண்டுவந்தீர்கள். வந்ததிலே கடைசியிலே என்ன ஆயிற்று என்றால் 5 எக்கர், 3 எக்கர், 2 எக்கர் வைத்திருப்பவனுக்கு விமோசனம் கிடைக்கவில்லை. அவன் தொலைந்தான்—சட்னியாகி விட்டான். அதற்குப் பிறகு மடாதிபதிகளுக்குப் பாதுகாப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்படி இருக்கிறது உங்கள் தர்மமான சட்டங்கள். உங்கள் நியாயம் இப்படி இருக்கிறது.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மசோதா இங்கு இருக்கிறது. அதைப்பற்றித்தான் கனம் அங்கத்தினர் பேச வேண்டும். தர்மத்தைப் பற்றிப் பேச வேறு இடம் இருக்கிறது—மேடை இருக்கிறது. இங்கு பேசவேண்டியது மசோதாவைப் பற்றித்தான். செலக்ட் கமிட்டியில் கனம் அங்கத்தினருடைய பெயரையும் பிரேரேபித்திருக்கிறேன். செலக்ட் கமிட்டியில் அங்கத்தினராக இருப்பவர்கள் இங்கே சாதாரணமாகப் பேசுவதில்லை. பேவசுதாக இருந்தாலும் மசோதாவைப் பற்றித்தான் பேசவேண்டும். அதுவும் மசோதாவைப் படித்துப் புரிந்துகொண்டு பேசவேண்டும்.

SRI D. S. AUTHIMOOLAM : I have clearly understood the 'Masotha'. I am strictly adhering to the advice of the Hon. Minister also அதாவது நான் சொல்ல வந்தது என்னவென்றால் நீங்கள் இந்த மசோதாவிலே . . .

DEPUTY SPEAKER : To whom does the hon. Member refer by using the word 'Neengal'?

SRI D. S. AUTHOMOOLAM : அதாவது சர்க்கார். உச்சவரம்பு மசோதாவிலே எல்லாவற்றுக்கும் 30 ஸ்டாண்டர்ட் எக்கர் என்று நிர்ணயித்தீர்கள். அதன் பின்பு உங்களை—கனம் மந்திரிகளையும், மற்றவர்களையும்—மடாதிபதிகள் பார்த்திருக்கிறார்கள். . . .

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எந்த மடாதிபதியும் பார்க்கவில்லை. அந்தக் காரியங்களை கனம் அங்கத்தினரே பார்த்துக் கொள்ளலாம்.

SRI D. S. AUTHIMOOLAM : அதன் பேரில் அவர்களுக்கு சலுகை கொடுக்கவேண்டும் என்று 200 ஏக்கர் என்று கொண்டு வந்தார்கள். இருநூறு ஏக்கர் என்று கொண்டுவந்த பிறகு, 'ஆபத்பாந்தவா', 'அனுதரக்ஷகா' என்று அவர்கள் சர்க்காரை வேண்டிக்கொண்டிருக்கலாம். அவர்களுக்கு சலுகை செய்வதற்காக கடைசியில் அந்த நிலங்கள் அவர்களிடம் சாசுவதமாக இருக்கவேண்டுமென்று நில உச்சவரம்பு மசோதாவிலே இருந்ததை வாபஸ் பெற்றுக்கொண்டு இப்போது ஒருமசோதா வந்திருக்கிறது. இப்படி மசோதாவிற்கு கணக்கு வழக்கே இல்லை. இப்போது ஒரு மசோதா கொண்டுவந்திருக்கிறார்கள். இந்த நாட்டில் ஜமீந்தார்கள் எப்படி தேவையில்லை என்று அவர்களை காலி செய்தோமோ அதே மாதிரி மடாதிபதிகள் விஷயத்திலும் இதையெல்லாம் இந்த நில உச்ச வரம்பு மசோதாவில் சரியானபடி கண்டிப்பு செய்து அந்த நிலங்களை எடுத்து land to the tiller என்று பழமொழிக்கேற்ப நடக்கவேண்டும். மடாதிபதிகளிடமிருந்து நிலங்களை எடுத்துக் கொடுத்திருக்கலாம். அப்படிக்கில்லாமல் அவர்களுக்கு பாதுகாப்பு செய்துவிட்டார்கள். ஜமீந்தார்களுக்கு ஜமீன் உரிமை கிடையாது, அவர்கள் இந்த நாட்டின் ப்ராக்ரஸுக்கு முட்டுக்கட்டைகள் என்று அவர்களை எப்படி அப்புறப்படுத்தினோமோ அதே மாதிரி இவர்களையும் செய்திருக்கவேண்டும். ஏன் சொல்லுகிறேன் என்றால் இந்த மடாதிபதிகள் கஷ்டப்பட்டு சம்பாத்தியம் செய்து லட்சக்கணக்கான ஏக்கர்கள் அவர்களுக்கு சொந்தமாக ஏற்படவில்லை. அந்தக் காலத்தில் இருந்த ஜனங்கள் பாமர ஜனங்களாக இருந்தார்கள். விவரம் தெரிந்த சமூகத்தார் ஆங்காங்கு நிலங்களை பட்டா செய்து கொண்டார்கள். இதைத் தவிர வேறு விதமாக இருக்க முடியாது. ஆயிரக்கணக்கான ஏக்கர்களை ஏகபோகமாக அனுபவித்துக்கொண்டு ஆத்மீக வேலை ஏதும் செய்யாமல் இருக்கிறார்கள். சில மடங்கள் இதற்கு எக்ஸெப்ஷனாக இருக்கலாம். சிருங்கேரி மடம், காஞ்சி காமகோடி பீடம் போன்ற மடங்களில் சில அறிவாளிகள் இருக்கலாமே தவிர நூற்றுக்கு தொண்ணூறு மடாதிபதிகள் ஒரு வேலையும் செய்யாமல் இருந்துகொண்டிருக்கிறார்கள். இவர்களால் நாட்டுக்கு ஒரு பிரயோசனமும் கிடையாது. அவர்களிடமிருந்து நிலங்களை நாம் பிடுங்கி நிலம் இல்லாதவர்களுக்குக் கொடுத்திருக்கவேண்டும். அப்படியில்லாது, ஒரு க்ளியர்-கட் பாலிஸி இல்லாத நிலையில் இருப்பதால் அவர்களுக்குப் பாதுகாப்பு கொடுக்க இந்த மசோதாவைக் கொண்டுவந்திருக்கிறார்கள். இந்த மசோதாவைக் கொண்டு வந்ததிலே இன்னொரு ஆப்ஜெக்ட் பூர்த்தியாகிறது என்று நினைக்கிறேன். நமது ப்ரைம் மினிஸ்டர் எப்போது பார்த்தாலும் டெனெண்ட்ஸ் ஃபார்மிங் சொஸைட்டி, கல்ட்டிவேட்டிங் டெனெண்ட்ஸ் சொஸைட்டி, கூட்டுறவு விவசாயப் பண்ணை, அப்படி, இப்படி என்று அடிக்கடி சொல்லிக்கொண்டிருப்பதால், "தமிழ் நாட்டில் பாருங்கள், இப்போது ஒரு சட்டம் கொண்டு வந்து அதன் மூலம் ஆயிரக்கணக்கான டெனெண்ட்ஸ் ஃபார்மிங் சொஸைட்டி ஏற்படுத்தப் போகிறோம்" என்று அவர்களுக்குச்

9th November 1961] [Sri D. S. Authimoolam]

சொல்லி, அவர்கள் மூலம் பிளானிங் கமிஷனுக்கு தகவல் சொல்லி, உணவு உற்பத்திக்காக வேலை செய்து விட்டதாகப் பெருமையாகச் சொல்லிக்கொள்ளலாமே தவிர இதன் மூலம் உண்மையாக நாட்டில் சோஷல் ஜஸ்டிஸ் செய்வதாக ஆகாது. இது மடாதிபதிகளைப் பாதுகாக்கும் திட்டம், மடாதிபதிகள் பாரம்பரையாக வேலை செய்ய வேண்டாம் என்ற முறையில் அவர்கள் ஆயிரக் கணக்கான ஏக்கர் நிலங்களை வைத்துக்கொள்ளக் கூடிய முறையில் கொண்டு வந்திருக்கிறீர்கள். இப்படிச் செய்வது சோஷலிஸ பாணி சமுதாயத்தை அமைப்பதற்கு வசதியாகாது, நீங்கள் மடாதிபதிகளுக்கு இதன் மூலம் பாதுகாப்புக் கொடுப்பதாகத்தான் இருக்கிறது என்று சொல்லிக்கொள்கிறேன்.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : ஒன்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இந்த மசோதா இல்லாதிருந்தால் நலம் என்று கனம் அங்கத்தினர் சொல்லுகிறாரா என்று கேட்க விரும்புகிறேன்.

* **SRI G. NARAYANASWAMI NAIDU** : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்தச் சட்டம் வெகு நீண்ட நாட்களாக நாம் எதிர்பார்த்த அபிலாஷைகளைப் பூர்த்தி செய்வதாக நான் நினைக்கிறேன். யாரோ ஒரு சிலருக்கு இந்த உலக பிரக்ஞை இல்லாதவர்களைத் தவிர பெரியவர்களாக இருப்பவர்களுக்கு, பண்டார சந்நிதிகளுக்கு இந்த சட்டம் ஆதரவாக இருப்பதாகப்படுகிறதே தவிர ஆதரவாகப் போவதும் இல்லை, ஷரத்துக்களும் குடிகளுக்கு எதிரிடையாகவும் இல்லை என்று நான் கருதுகிறேன். கோவில்கள், அதற்குரிய தர்மங்கள் எப்போதுமே, எந்தக் காலத்திலுமே தேவை. சில தர்மங்கள் இப்போது தேவையில்லை என்று நாம் நினைக்கலாம். பழைய காலத்து வழிப்போக்கர்கள் ஒன்றைப் பார்த்திருப்பார்கள்—ஏன், இப்போது காரிலே போகிறவர்கள்கூட இந்தக் காட்சியைப் பார்த்திருக்கலாம். ஐந்து மைலுக்கு ஒரு மண்டபம் கட்டி அங்கே சமீபத்திலே ஒரு சுமைதாங்கிக் கல்லை நட்டிருப்பார்கள். அந்தக் காலத்தில் மூட்டை தூக்கிக்கொண்டு போகிறவர்கள் ஓய்வு பெற, தலையில் இருக்கும் சுமையை சுமை தாங்கிக் கல்லில் இறக்கிவிட்டு, பக்கத்தில் இருக்கக்கூடிய நீரூற்று அல்லது குளத்தில் தண்ணீர் சாப்பிட்டுவிட்டு மண்டபத்தில் தங்கி சிறிது நேரம் ஓய்வு எடுத்துக்கொண்டு செல்வதற்கு அந்தக் காலத்திலே தர்மங்களை ஏற்படுத்தினார்கள். ஆனால் இன்று மூட்டை தூக்கிக்கொண்டு போகின்றவர்கள் இல்லை, மண்டபத்தில் ஓய்வு பெறுகிறவர்களும் இல்லை. குளத்தில் தண்ணீர் சாப்பிட்டால் அது ரொம்பவும் சுகாதாரக் குறைவு என்று வேறு சொல்லப்படுகிறது. ஆகையால் இப்போது தண்ணீர்ப் பந்தல் தேவையில்லை, சுமை தாங்கி கட்டவேண்டியதில்லை, மண்டபங்கள் கட்ட வேண்டியதில்லை. இன்னும் சில இடங்களிலே தண்ணீர் பந்தலுக்கு தர்மங்கள் இருக்கின்றன. மணலியில் சின்னய்யா எஸ்டேட்டிலே வெற்றிலை பாக்கு கொடுப்பதற்காகக் கொடுக்கப்பட்ட கிராமம் அது. சாப்பிட்டுவிட்டு ஓய்வு பெறுகிறவர்களுக்கு வெற்றிலை பாக்கு

மாத்திரம் கொடுக்க நூற்றுக்கணக்கான எக்கர் எழுதிவைத்திருக்கிறார்கள். இப்போது பொதுமக்களுக்குப் பயனுள்ள காரியம் என்றால் வெற்றிலை பாக்குக்குப் பதிலாக, அதை சிகரெட் தர்மம் செய்கிற ஸ்தாபனமாக மாற்றியாக வேண்டும். இன்னும் 5 வருஷம் அல்லது 10 வருஷத்திற்குப் பிறகு வெற்றிலை பாக்கு போட்டுக் கொள்ளக்கூடியவர்கள் யாரையும் பார்க்க முடியாது. இப்போது கூட என்னையும் கனம் முத்துகுமாரசுவாமியையும் தவிர வேறு யாரும் அடைக்காய் போடுபவர் இல்லை. காலத்திற்கு ஏற்ற தர்மம் இது என்று புரிந்து அதற்கேற்ற வழியில் தர்மம் செய்ய இவைகளையும் இந்தச் சட்டத்தில் கொண்டு வந்தால் நலமாக இருக்கும்—சட்டம் அதற்கு இடம் கொடுக்கிறதோ இல்லையோ எனக்குத் தெரியாது. இருந்தாலும் மூல நோக்கம் என்று சில பேர்கள் சொல்லுகிறார்களே இந்த மூல நோக்கத்தை இந்தச் சட்டத்தினால் யாராலும் நிறைவேற்ற முடியாது. மூல நோக்கத்திற்கான காரணங்களே மாறி விட்டன. ஆகையால் தர்மங்களால் ஜனங்களுக்கு தொந்தரவு இல்லாமல் தர்மம் தர்மமாகவே இருக்க வேண்டும்—ஆனால் அதே முறையில் அதர்மமாக இருக்கக்கூடாது. விவசாயம் செய்வதை ஏக போக உரிமையாக ஏலத்திற்கு விட்டு, பணம் உடையவர்கள் ஏலம் எடுத்து யாரோ வாழ்வதற்குப் பயன் பெற்றதை மாற்றவேண்டும். அது இந்தச் சட்டத்தினால் பூர்ணமாக நிறைவேற்றப்படும் என்று எதிர்பார்க்கிறேன். பொதுவாக பசு மாடு வளர்த்து அந்த மாடு போடுகின்ற சாணத்தை எடுத்து அதை விபூதியாக்கி சில பேருக்கு கொடுப்பதற்காக என்று ஒரு தர்மம் எழுதி வைத்திருக்கிறார்கள். இது இப்போது தேவையா? நாம் கோயிலுக்குப் போனால், ஏதோ சிலர் பிறருடைய தொந்தரவுக்காக விபூதி பூசிக் கொள்வதைப் பார்க்கலாம். இப்போது விபூதி பூசிக் கொள்ளும் வழக்கம் கொஞ்சம் கொஞ்சமாக குறைந்து கொண்டு வருகிறது. அடுத்த தலைமுறைக்கு இந்த அளவுக்காவது இருக்குமா என்பதே சந்தேகமாக இருக்கிறது. ஆகவே அந்த மாதிரியான தர்மத்திற்காக எழுதியுள்ள பொருள்களை வேறு துறைக்குப் பயன்படுத்தலாம். அல்லது தமிழுக்கு, அதன் வளர்ச்சிக்கு உபயோகப்படுத்தலாம்.

பத்து எக்கர் வரையிலும் விதிவிலக்கு கொடுக்கலாம் என்று கனம் மந்திரி அவர்கள் தெரிவித்தார்கள். இது நல்லதென்று எனக்குப் படுகிறது. நந்தவனமாக இருப்பதற்காகவே இந்த பத்து எக்கர் ஒதுக்கப்பட்டது என்று நான் கருதுகிறேன். பழைய காலத்திலே கிராமத்திலே உள்ள கோவில்களில்தான் புல்தரைகளையும், நந்தவனங்களையும் பார்க்கலாம். இந்த இரண்டும் கிராமத்தை அழகுபடுத்துவதற்காக ஏற்படுத்தப்பட்ட ஒரு வழி என்று நான் நினைக்கிறேன். அதேபோல் முன்பெல்லாம் கோயில்களில் நந்தவனங்கள் இருக்கும். இப்போது கோயில்களில் நந்தவனங்கள் இருப்பது மிகவும் குறைந்து போய்விட்டது. முந்தி கோயில்களின் உள்ளே போனால், விஷ்ணு கோயிலாக இருந்தால் அங்கு துளசி இருக்கும். சிவன் கோயிலாக இருந்தால் வில்வ மரம்

9th November 1961. [Sri G. Narayanaswami Naidu]

இருக்கும். இப்போது இருக்கிற வில்வ மரத்தையும் வெட்டி தைலம் காய்ச்சி விடுகிறார்கள். இப்போது மீண்டும் முன்புபோல் வில்வ மரங்களை வைக்க வேண்டும். காரணம் என்னவென்றால், அது வன மகோத்சவம் கொண்டாடியதாகவும் இருக்கும்; ஆரோக்கியத்தையும் கொடுக்கும்; அறிவையும் வளர்க்கும்; நல்ல அழகையும் கொடுக்கும். அதை விட்டுவிட்டு இப்போது பிரகாரம் பூராவும் கல்லும், செடிகளும், முள்ளுமாகத்தான் இருப்பதைக் காண்கிறோம். கோயில்களில் வில்வ மரம், துளசி ஆகியவைகளை வைப்பது மிகவும் அவசியம். வில்வ மரத்தின் உபயோகத்தைப் பற்றிச் சொல்வதாக இருந்தால் வண்டி வண்டியாய் சொல்லலாம்; அதேபோல் துளசியைப் பற்றியும் வண்டி வண்டியாய் சொல்லலாம். நம்முடைய உடல் ஆரோக்கியத்திற்கு இவைகள் மிகவும் அவசியம். ஆங்கில மருந்து டுலசால் என்பதுகூட துளசிச் சாறுடு, இன்னும் வேறு சில சேர்க்கப்பட்டு செய்வதாகச் சொல்லப்படுகிறது. அதேபோல் பிரான்ஸ் தேசத்திலிருந்து வில்வ மரத்திலிருந்து பற்பல மருந்துகள் செய்யப்பட்டு, அங்கு டப்பாக்களில் அடைக்கப்பட்டு இங்கு விற்கப்படுவதாகச் சொல்லப்படுகிறது. ஆகவே இந்த மாதிரி பல நன்மைகளைத் தரும் மரங்களையும் மருந்துக்கு உதவும் பச்சிலைகளையும் கோவில்களில் வளர்க்க வேண்டும். கொடுக்கக்கூடிய முறையில் இதை மாற்றியமைக்க வேண்டுமே தவிர, இந்த பத்து எக்கர் நிலத்தைச் சாகுபடிக்கு என்று ஒதுக்கக்கூடாது. ஒதுக்க முடியாது. கோயிலைச் சார்ந்த நிலங்களை கூட்டுறவு சங்கங்கள் மூலம் பயிரிடுவதற்கான ஏற்பாட்டைச் செய்யவேண்டும். இந்த பத்து ஏக்கர் ஒதுக்குவதைப் பற்றி நண்பர் ஸ்ரீ. ஆர். சீனுவாச அய்யர் அவர்கள் ஒரு கோணத்திலிருந்து பார்த்துப் பேசினார்கள். நான் மற்றொரு கோணத்தில் இருந்து பேசுகிறேன். இந்த பத்து ஏக்கர் நிலத்தை மட்டும் தனிப்பட்ட முறையில் கோவிலார் சாகுபடி செய்யவேண்டுமென்றால், அதற்காக தனியாக உழவு மாடுகள் வேண்டும். அதை கோவில் டிரஸ்டியோ அல்லது பண்டார சந்நதியோ நேரில் பார்வையிட வேண்டும். அப்படியெல்லாம் பார்த்தாலும் அது கடைசியிலே நஷ்டத்திலே தான் போய் முடியும். லாபம் வரக்கூடிய முறையில் நம்முடைய தர்ம சொத்துக்கள் இதுவரையிலும் பரிபாலித்தது கிடையாது. பரம்பரை டிரஸ்டிகளாக உள்ளவர்கள், தங்கள் பிள்ளை தவறான வழியில் ஈடுபட்டிருந்தால், சொத்து அழிந்து விடக்கூடாதே என்பதற்காக, தர்மத்திற்காக எழுதி வைத்தார்களே தவிர, அதை ஒரு ஷராவாக வைத்துக் கொண்டிருந்தார்களே தவிர, வேறொன்றுமில்லை. அப்படி வைக்கப்பட்ட தர்ம சொத்துக்களும் இன்றைக்கு அழிந்துவிட்டது. சத்திரங்கள் தமிழ் நாட்டிலே இருக்கிறது என்று சொன்னால், எந்த சத்திரமாவது நல்ல முறையிலே இருக்கிறதா என்று பார்த்தால் ஒன்றுகூட இடிந்து விழாமல் இல்லை. ஏதோ சத்திரம் என்று பெயருக்கு இருக்கும். அதற்குரிய சொத்துக்களை ஒருவர் அல்லது சில பேர்கள் அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்தச் சொத்துக்களையெல்லாம் நல்ல

முறையில் பரிபாலித்து, அந்தச் சொத்துக்கள் எல்லாம் பொது மக்களுக்கு உபயோகப்படும் வகையில் மாற்றியமைக்கவேண்டும். அதற்கு இந்தச் சட்டம் இடம் கொடுக்குமென்று நான் கருது கிறேன். பண்டார சந்நதிகள் இனிமேல் நிலம் வைத்துக்கொள்ள வேண்டுமென்று சொன்னாலும், அந்த வாய்ப்பு தானாகவே குறைந்து போய்விடுமென்று நான் நினைக்கிறேன். சாகுபடி செய்வதற்கு அவர்களுக்கு அதிகாரம் இல்லாமல் அரசாங்கம் செய்துவிட்டால், அவர்கள் நிலம் வைத்துக்கொள்ள மாட்டார்கள். ஆகவே அந்த முறையில் இந்த சட்டம் இருக்க உதவும் என்று நம்புகிறேன். இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்த சர்க்காரையும், அறநிலைய அமைச்சர் அவர்களையும் நான் மனமாரப் பாராட்டிக் கொண்டு, என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, நான் பொறுக்குக் கமிட்டியிலே இருப்பதால், முக்கியமாக இரண்டொரு வார்த்தைகள் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதிகமாக நேரத்தை வீணாக்க விரும்பவில்லை. முக்கியமாக தர்ம ஸ்தாபனங்கள் நல்ல முறையிலே நடக்க வேண்டும், சாகுபடியாளர்களை அப்புறப்படுத்தக் கூடாது, உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்றெல்லாம் இருப்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் இதிலே முக்கியமானதொன்று, நாம் உச்ச வரம்பு மசோதாவிலே முப்பது ஸ்டாண்டர்டு ஏக்கர் என்று பேசி தீர்மானம் செய்திருக்கிறோம். ஆனால், இதிலே பத்து ஏக்கர் என்று கண்டிருக்கிறது. நிர்வாக ஸ்தாபனம் நல்லமுறையில் நடப்பதற்கு தேவாலயங்களுக்கு இன்னும் அதிகமாக வருவாய் வேண்டும். ஆகவே தர்ம ஸ்தாபனங்கள் நல்ல முறையில் நடப்பதற்கு பொதுவாக முப்பது ஏக்கர் வைக்கலாமா, கூடாதா என்பதைச் சர்க்கார் சற்று யோசிக்கவேண்டும். தவிர, தோப்புக்களுக்கு விதிவிலக்கு கொடுக்கவேண்டும். தென்னந்தோப்புக்களுக்கும், இலுப்பைத் தோப்புக்களுக்கும் முக்கியமாக விதிவிலக்கு கொடுக்க வேண்டும். இவை இரண்டும் தேவாலயங்களுக்கு மிகவும் முக்கியமானது. எண்ணெய் எடுப்பதற்கு இலுப்பைந் தோப்புக்கள் மிகவும் அவசியம். அதேபோல் கோயில்களுக்கு தேங்காயும் முக்கியமானது. ஆகவே இவைகளையும் சற்று யோசிக்க வேண்டும். இந்த அளவோடு என்னுடைய கருத்துக்களைத் தெரிவித்துக் கொண்டு, மற்றவைகளை ஒவ்வொரு செக்ஷனைக வரும்போது என்னுடைய அபிப்பிராயத்தை பொறுக்குக் கமிட்டியில் சமர்ப்பிக்கிறேன் என்று சொல்லிக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவைப் பற்றி கனம் அங்கத்தினர்கள் தங்களுடைய கருத்துக்கள், யோசனைகள், குறைபாடுகள் எல்லாவற்றையும் எடுத்துச் சொன்னார்கள். சிலவற்றை பொறுக்குக் கமிட்டியிலே பரிசீலனை செய்யலாம் என்று சொன்னார்கள். சில

**9th November 1961.] [Sri M. Bhaktavatsalam]**

யோசனைகளை இந்த மசோதா சட்டமாக்கப்பட்ட பிறகு விதிகளிலே கவனிக்கலாம். வேறு சிலர் சில கருத்துக்கள் இந்த மசோதாவுக்குப் புறம்பானது என்று சொன்னார்கள். பொதுவாக இந்தச் சந்தர்ப்பத்திலே இதையெல்லாம் எடுத்துச் சொல்வதற்கு கனம் அங்கத்தினர்களுக்கு சந்தர்ப்பம் கிடைத்தது. ஆனால் இது பொறுக்குக் கமிட்டியிலே கவனிக்கப்படும் என்று சொல்லப் பட்டது. ஆனால் கனம் எதிர்க் கட்சித் தலைவர் அவர்கள் தர்ம ஸ்தாபனங்கள் சிலவற்றிற்கு விதிவிலக்கு கொடுக்கவேண்டுமென்று சொன்னார்கள். நாம் அதோடு மட்டுமல்லாமல், எல்லாவற்றுக்கும் 5 ஏக்கருக்கு மேற்படாமல் இருக்கவேண்டுமென்று செய்திருக் கிறோம். அப்படிச் செய்வதனால் தோப்புக்களை குத்தகைக்கு விட முடியாது. தோட்டப் பயிர்களை விட முடியாது. மலைப் பிரதேசங் களை விட முடியாது. ஆகவே இவைகளுக்கு எல்லாம் விதிவிலக்கு கொடுக்கப்பட வேண்டும். இதையெல்லாம் தான் செலக்ட் கமிட்டி பரிசிலனை செய்யும். அதேபோல் வேறு சில கனம் அங்கத்தினர்கள் தெரிவித்த கருத்துக்களையும் இந்த கமிட்டி பரிசிலனை செய்யும். கனம் எதிர்க் கட்சித் தலைவர் அவர்கள் பேசியபோது, கோயில் களுக்கு 10 ஸ்டாண்டர்டு ஏக்கர் என்று சொல்லப்பட்டிருக்கிறதே, நாம் உச்ச வரம்பை சட்டத்திலே 30 ஏக்கர் என்று செய்திருக் கிறோமே என்று சொன்னார்கள். அந்த 30 ஏக்கர் வேறு, இந்த 10 ஏக்கர் வேறு. சொந்தத்திற்கு நிலத்தை வைத்துக் கொள்வ தென்றால், 30 ஏக்கர் என்று வரம்பு கட்டப்பட்டிருக்கிறது. இதிலே சொந்தத்திற்கு எடுக்கவில்லை. எவ்வளவு வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம் என்பதற்காக முன்பு உச்ச வரம்பு சட்டத்திலே இதற்கு விதிவிலக்கு கொடுக்கப்பட்டது. ஆனால் இப் போது 10 ஏக்கர் என்று சொல்வது, இதைச் சொந்தமாக சாகுபடி செய்வது. மற்றவை யெல்லாம் குத்தகைதாரர் மூலமாக. முன்பெல்லாம் சொந்தமாக சாகுபடி செய்ததின் மூலமாக, நஷ்டம் வருகிறதே தவிர, பலனில்லை. வேண்டுமானால் ஒன்றிரண்டு தர்ம ஸ்தாபனங்களுக்கு வரலாம். ஆகவேதான் சொந்த உபயோகத் திற்கு என்று தர்ம ஸ்தாபனத்திற்கும், தேவஸ்தானத்திற்கும் ஓரளவுக்கு நிலம் ஒதுக்கவேண்டுமென்பதற்காக பத்து ஏக்கர் என்று வைத்திருக்கிறோம். ஆகவே 30 ஏக்கர் தேவையில்லை. ஆனால் இந்த 10 ஏக்கர் வேண்டுமா, அல்லது அதற்கும் குறைவாக வேண்டுமா, அல்லது அதிகமாக வேண்டுமா என்பதையெல்லாம் கூட பொறுக்குக் கமிட்டியிலே முடிவு செய்துகொள்ளலாம். ஆகவே நான் மேலும் இந்தச் சபையினுடைய காலத்தை எடுத்துக்கொள் ளாமல் இந்த மசோதா பற்றி பொறுக்குக் கமிட்டியிலே நல்ல முறையிலே முடிவு செய்து கொள்ளலாம் என்று நினைக்கிறேன். அங்கத்தினர்கள் எல்லோரும் ஏகமனதாக இதை வரவேற்றது குறித்து மகிழ்ச்சியடைகிறேன். இந்த மசோதாவிலே ஒன்றுமில்லை என்று சொன்ன அங்கத்தினர்கூட, இந்த மசோதா வேண்டாமென்று சொல்லவில்லை. அனைவரும் இந்த மசோதாவை வரவேற்றதற்காக நன்றி கூறிக் கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

1-30 p.m. DEPUTY SPEAKER : The question is—

'That the Madras Public Trusts (Regulation of Administration of Agricultural Land) Bill, 1961 (L.A. Bill No. 47 of 1961) be referred to a Select Committee consisting of—

1 The Hon. Sri M. BHAKTAVATSALAM.
2 The Hon. Sri C. SUBRAMANIAM.
3 Sri P. G. KARUTHIRUMAN.
4 Sri R. SRINIVASA IYER.
5 Sri T. T. DANIEL.
6 Sri K. S. G. HAJA SHERIFF.
7 Sri R. SUBRAMANIAM
8 Sri K. R. VISWANATHAN.
9 Sri K. S. SUBRAMANIA GOUNDER.
10 Srimathi Dr. T. S. SOUNDARAM RAMACHANDRAN.
11 Sri A. R. SUBBIAH MUDALIAR.
12 Sri V. K. RAMASWAMY MUDALIYAR.
13 Sri D. S. AUTHIMOOLAM.
14 Sri V. K. KOTHANDARAMAN
15 Sri M. SELVARAJ.
16 Sri A. R. MARIMUTHU.
17 Sri G. NARAYANASWAMI NAIDU.

The motion was put and carried.

Under Rhle 99 (1) of the Assembly Rules, I nominate Hon. Sri M. Bhaktavatsalam as the Chairman of the Select Committee.

VI. ANNOUNCEMENTS—*cont.*

(2) BUSINESS OF THE HOUSE.

DEPUTY SPEAKER : I have to announce that the Business Advisory Committee at its meeting-to-day decided on the following programme of business—

| | |
|---|---|
| November 9th (after noon) | Discussion on the Third Five-Year Plan. |
| November 10th<br>November 11th | Discussion on the Third Five-Year Plan. |
| November 12th Sunday —Holiday. | |
| November 13th | Discussion on National Integration. |
| November 14th<br>November 15th ; and<br>November 16th | 1. The Madras General Sales Tax (Third Amendment) Bill, 1961 (L.A. Bill No. 26 of 1961). |